உ

கணபதி துணை

# மூர்த்தியலங்கார விதி



ஆக்கியோன்


சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக் குருக்கள் அவர்கள்



கீலக௵ ஆடி௴.

உ

திருச்சிற்றம்பலம்

# மூர்த்தியலங்கார விதி

அச்சுவேலி

சிவாகமஞானபானு

சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக்

குருக்கள் அவர்களால்

ஆக்கப்பெற்றது.

குருக்களின் பௌத்திரர்

வை. கனகசபாபதிக்குருக்களால்

கொக்குவில்

சோதிடப்பிரகாசயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

1968.

விலை சதம் 35.

உ

சிவமயம்

# முகவுரை

அச்சுவேலி, ஆதிசைவ குலதிலகராகிய சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக்குருக்கள் சிவாகம ஞானபாநு அவர்கள் மூர்த்தி அலங்காரவிதி என்னும் நூல் வெளியிட்டிருக்கிறார்கள். இந்நூல் சைவமக்கள் யாவரும் படித்துப் பயன்பெறு தற்குரிய கருவூலம் என்பது எனது கருத்து. பலநூல்களின் ஆதாரங்கள் காட்டி விளக்கமாக எழுதப்பெற்றிருக்கின்றது. இக்காலத்தில் நுண்ணுணர்வால் ஆராய்ந்து இவ்வளவு சிறப்பாக எழுதுவோர் மிக அரியர். உலகோபகாரமாக தெய்வவழிபாடு அன்பினுல் நிகழவேண்டும், உண்மைகளை உணர்ந்து வழிபடவேண்டும் என்னும் பேரார்வம்கொண்டு இந்நூலை ஆக்கித்தந்த இப்பெரியாருக்கு சைவ உலகம் கடப்பாடுடையது.

மனம்போனவாறெல்லாம் பொம்மைகளைப்போல நினைந்து தெய்வத்திருவுருவத்தை அலங்காரஞ் செய்தல் சாஸ்திரவிரோதம்;

பெருந்தீமைவிளையும். இவற்றை இந்நூலில் கண்டு இன்புறலாம். ஆலயபரிபாலனஞ் செய்வோரும், உபயஞ் செய்வோரும் இந்நூலை வாங்கிப்படித்து எந்த எந்தத் திருவுருவத்தை எந்த முறையில் என்ன என்ன சாதனங்களால் அலங்காரஞ் செய்யவேண்டுமோ அந்த முறையறிந்து செய்தால் செய்பவருக்கும், செய்விப்போருக்கும் பெருநலங்கள் பல உண்டாம். திருவருள் விளக்கம் உண்டாம். நமது சமயம் தழைக்கும், நாட்டுக்கும் பெருநன்மை உண்டாம்.

இங்ஙனம்

புலவர் த. குமாரசுவாமிப்பிள்ளை,

கொக்குவில்,

---

கணபதி துணை

# மூர்த்திகளை அலங்கரிக்கும் முறை

# மூர்த்தியலங்கார விதி

௧. அநாதிமலமுத்தராய், உருவம் குறி செயல் முதலியன இல்லாதவராய் ஒப்புயர்வின்றி விளங்கும் பரமசிவன் அநாதிமலபெத்தர்களாகிய ஆன்மாக்கள்மேல் வைத்த கருணையினாலே அருவம் அருவுருவம் உருவம் என்னும் திருமேனிகளைக் கொண்டருளினர். அவற்றுள் அருவம் நிஷ்களம் எனவும் அருவுருவம் சகள நிஷ்களம் எனவும் உருவம் சகளம் எனவும் பெயர்பெறும்.

௨. மகேசுவரமாகிய உருவத்திருமேனியானது கன்மசாதாக்கியரது அமிசமாகத் தோன்றியதாய், சிருட்டி திதி சங்காரம் என்னும் கிருத்தியங்களையுடையதாய், நாநாரூபத்துடன் கூடியதாய் பல அடையாளங்களையுடையதாய் பல லீலைகளையுடையதாய் அநேக ஆகாரமுள்ளதாய் இருப்பதாம்,

௩. மகேசுரமூர்த்தங்கள்: சோமாஸ்கந்தர், சுகாசனர், கல்யாணசுந்தரர், சந்திரசேகரர் கங்காதரர், இடபாரூடர், அர்த்தநாரீசுரர், கிராதர், வீரபத்திரர், பிக்ஷாடனர், நிருத்தமூர்த்தி, காமாரி, காலகாலர், கஜாரி, திரிபுராரி, சலந்தரவதர், யோகதக்ஷிணாமூர்த்தி, வீணாதக்ஷிணாமூர்த்தி, ஹரியர்த்தர், சண்டேசாநுக்கிரகர் விஷாபகரணர், சக்கரதானர், விக்கிநேசாநுக்கிரகர், ஏகபாதர், பைரவர், கூர்மசங்காரர், மத்சியாரி, வராகாரி, இலிங்கோற்பவர் முதலிய பலபேதங்களாயுள்ளன. விநாயக சுப்பிரமண்ய மூர்த்தங்களும் சிவபெருமானது அருள்வடிவங்களேயாம். சிவனுக்கும் இம்மூர்த்தங்களுக்கும பேதமில்லை, என்பது உண்மைநூற்றுணிபு,

௪. இத் திருமேனிகள் போகவடிவம், யோகவடிவம், கோரவடிவம் என முத்திறப்படும். போகமூர்த்தங்கள்: உமாமகேசுரர், கல்யாணசுந்தரர் முதலியன. யோகமூர்த்தங்கள்: தக்ஷிணாமூர்த்தி முதலியன. கோரமூர்த்தங்கள்: காலசங்காரர், கஜாரி முதலியனவாம். சத்தியும் அவ்வாறே உமை துர்க்கை காளி முதலிய பலபேதங்களைப் பொருந்தும். சத்தியெனப்

படுவது சிவபெருமானின் வேருகாத திருவருளேயாம்,

ரு. தேவமூர்த்தங்களுள்ளே நிற்பனவாக அமைந்துள்ளன சில, இருப்பனவாகப் பொருந்தியுள்ளனவுஞ் சில, நடப்பனவாக விளங்கியுள்ளனவுஞ் சில, சயனிப்பவைகளாக அமைந்துள்ளனவுஞ் சிலவாம், இம் மூர்த்தங்கட்குப் பூசை உற்சவங்கள் எல்லாஉபசாரங்களுடனும் செயற்பாலன, செய்யுங்கால் மந்திரபேதம் உண்டேயன்றிக் கிரியாபேதம் இல்லையென அறிக, பிரதிமா பேதங்களின் இலட்சணங்கள் காமிகம் காரணம் முதலிய மூலாகமங்களிலும் அம்சுமான் பேதமாகிய காசியபம் முதலிய உபாகமங்களிலும் பகரப்பட்டுள்ளன.

தேவிகாலோத்தரத்திலே,

''பரமேசுரனுடைய ரூபபேதங்கள் உலகரக்ஷணார்த்தமாகவே உண்டாயின; அந்த ரூபபேதங்கள் வழிபடுவோருக்கு வெவ்வேறு பலன்களைத் தருவனவாக எவரெவர் எந்தெந்த லீலாரூபங்களை வழிபடுகின்ருரோ, அவரவர்

அந்தந்த தரிசனத்தால் அதற்கேற்ற இஷ்ட பலன்களை எய்துவர்'' என்று கூறப்பட்டது.

அ. பரமகருணாநிதியாகிய சிவபெருமான் ஆன்மாக்கள் செய்யும் வழிபாட்டைக்கொண்டருளுவதற்கு ஆதாரமாகக்கொண்டு நிற்கும் மூர்த்திகளைப் பூஜாகாலங்களிலும் உற்சவகாலங்களிலும் பட்டுவஸ்திரங்களாலும், புஷ்பங்களாலும், மாலைகளாலும், ஆபரணங்களாலும் அலங்காரஞ்செய்தல், அவ்விறைவனுக்குச் சமர்ப்பிக்கும் உபசாரவகைகளுள் அடக்கிக் காரணம் சுப்பிரபேதம் முதலிய ஆகமங்கள் கூறுகின்றன.

சிவபெருமானுக்குச்செய்யும் உபசாரங்கள் அங்கம் உபாங்கம் பிரத்தியங்கம் என்று மூன்று வகைப்படும். அபிஷேகம், நைவேத்தியம், ஹோமம், நித்தியோற்சவம், தூபதீபாதிகள் அங்கமெனச் சொல்லப்படும், வஸ்திரம் ஆபரணாதிகளால் அலங்கரித்தல், சந்தனம் மாலை முதலியவற்றால் அலங்கரித்தல் உபாங்கம் என்றறியத்தக்கது. சாமரம் குடை கண்ணாடி முதலிய பிற உபசாரங்கள் பிரத்தியங்கம் எனப்படும்.

𑌸𑌦𑍍𑌯𑍋𑌜𑌾𑌤𑌂 𑌚 𑌪𑍁𑌷𑍍𑌪𑌂
𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌚𑍇𑌤𑌿 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑍍 ।
𑌅𑌨𑍍𑌨𑌂 𑌚𑍈𑌵 𑌨𑌿𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌚
𑌹𑌾𑌰𑍍𑌦𑌂 𑌨𑌿𑌵𑍇𑌦𑍍𑌯 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌤𑌤𑌃 ।
𑌯𑌥𑍇𑌷𑍍𑌟𑌾𑌦𑌿𑌕𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂
𑌉𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌯 𑌤𑍍𑌯𑌜𑍇𑌤𑍍 𑌤𑌤𑌃 ।
𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌭𑌰𑌣𑌾𑌦𑍍𑌯𑌂 𑌚
𑌗𑌨𑍍𑌧𑌮𑌾𑌲𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌲𑌙𑍍𑌕𑍃𑌤𑌮𑍍 ।
𑌉𑌪𑌾𑌦𑍍𑌧𑌿𑌤𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌂
𑌤𑌾𑌮𑌸𑌂 𑌤𑍁 𑌦𑌰𑍍𑌪𑌣𑍇 ।
𑌶𑍇𑌷𑌾𑌣𑍍𑌯𑌨𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌾𑌨𑌾𑌣𑌿
𑌪𑍁𑌤𑍍𑌰𑌂 𑌗𑌤𑌿𑌤𑌿 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑍍 ।

என்று அம்சுமாஞகமத்திற் சொல்லப்பட்டது.

எ. பிரதிமைகளை அலங்கரிப்பதற்கு வெண்ணிறமுடைய வெள்ளெருக்கு, கொக்கிறகுமந்தாரை, பிச்சி, நந்தியாவர்த்தம், மல்லிகை, முல்லை முதலிய சாத்துவிக புஷ்பங்களும், செந்நிறமுடைய செந்தாமரை, செங்கழுநீர், செவ்வலரி முதலிய இராசத புஷ்பங்களும், பொன்

நிறமுடைய சண்பகம் கோங்கு முதலிய ராசத சாத்விக புஷ்பங்களும், வில்வம் அறுகு துளசி மருக்கொழுந்து மாசிப்பச்சை திருநீற் றுப்பச்சை முதலிய பத்திரங்களும், நீலோற் பலமும் உரியனவாம், இதற்குப் பிரமாணம் சுப்பிரபேதத்தும், சிவதர்மத்தும் காண்க.

அ. ஏகவர்ணப் பூக்களாலும் பலவர்ணப் பூக்களாலும் புஷ்பபத்திரங்களாலும் கட்டப் பட்ட இண்டை தொடை கண்ணி பந்து முத லிய பலபேதமான மாலைகளும், மகுடம் குண்ட லம் கங்கணம் ஆரம் முதலிய ஆபரணங்களும் தரிப்பதற்குத் தக்கனவாம். சாத்துவதற்கு உத் தமமாயுள்ளது பட்டுவஸ்திரமேயாம். பருத் திநூல் வஸ்திரமாயின் சுத்தஞ்செய்து கிரகிக் கத்தக்கதாம். அசுத்தவஸ்திரமும், பழையன வும் கிழிந்தனவுமாகிய ஆடைகளும் விலக்கத் தக்கனவாம். இப்படி அம்சுமானாகமத்திலும் சிவதர்மத்திலும் சொல்லப்பட்டது,

[illegible]

[illegible] ।

[illegible]

[illegible] ।

என்று வீராகமம் விதிக்கின்றது. இவ்வாகமங்களின் கருத்தையுட்கொண்டு, திருத்தொண்டர் புராணத்தில்,

'கோட்டுமலருந் நிலமலருங் குளிர்நீர்மலரும் கொழுங்கொடியின், தோட்டுமலரு மாமலருஞ் சுருதிமலருந் திருவாயிற், காட்டுமுறுவல் நிலவலரக் கனகவரையிற் பன்னகநாண், பூட்டுமொருவர் திருமுடிமேற் புனையலாகுமலர் தெரிந்து''

எனவும்,

''கொண்டுவந்து தனியிடத்தி னிருந்து நோக்குங் கோவைகளும், இண்டைச் சுருக்குந் தாமமுடனிணைக்கும் வாசமாலைகளும், தண்டிற்கட்டுங் கண்ணிகளுந் தாளிற்பிணைக்கும் பிணையல்களு, நுண்டாதிறைக்குந் தொடையல்களுஞ் சமைத்துநுடங்கு நூண்மார்பர்.''

எனவும்,

கந்தபுராணத்தில்,

நொதுமல் பெற்றிடு நண்டுகில் சூழ்த்தனர்
முதியசந்த முதல மட்டித்தனர்
கதிருநன் பொற்க லன்வகை சாத்தினர்
மதுமலர்த் தொகை மாலிகை சூட்டினர்''

எனவும், பிறவும் வரும் அருமைத்திருவாக்குக் களுங் காண்க.

கூ. மூர்த்திகளைத் தீண்டி அலங்கரிக்கும் சிவபுண்ணிய கைங்கரியம் புரிவோர், அந்தந்த மூர்த்திகளுக்குரிய வஸ்திரம் புஷ்பம் மாலை ஆபரணம் முதலியவற்றால் அலங்கரிக்கக்கட வர், விலக்கப்பட்ட மாலைகளாலும் அசுத்த வஸ்திரங்களாலும் போலிக்கை கால்களாலும் தகாத பிற போலிப்பொருள்களாலும் விபரீத மாய் வனப்புச்செய்வது விபரீத பலனையே தரும்.

க0. மூர்த்திகள் இருத்தல் நிற்றல் சயனித் தல் முதலாக எவ்வாறு அமைந்துள்ளனவோ அந்த ஆகிருதியாகவே அலங்கரித்தல் முறை யாம். சாந்தமூர்த்திகளை உக்கிரவடிவாக ஒப் பனைசெய்வதும் அதுபோன்ற பிறவும் நரகபத னத்துக்கே வழிவகுத்த வாறும். சாஸ்திர விதிப்படி உண்டாக்கப்பட்ட மூர்த்திகளைப் பிர மாணந் தவறடையும்படி தங்கை வன்மையும் மனமுஞ் சென்றவாறு அலங்கரிப்பது கொடிய அபசாரச் செயலேயாம் இப்விதமான துரா சாரத்தைக் கைக்கொள்ளுவதால் நேரமிந

தல் வளங்குன்றுதல் முதலிய கெடுதிகள் நாட்டுக்கு உளவாம் என்று சிவவித்தைகள் விரிவாகச் செப்புகின்றன.

கக. தெய்வத்திருமேனிகளில் கபடமான அலங்காரஞ்செய்தலும், போலிஆபரணங்கள் தரித்தலும், அயோக்கியமான மற்றெப்பொருட்களைச் சாத்துதலும் கூடாதென்பதற்குப் பிரமாணம்; வீரதந்திரத்தில்,

𑌕𑍃𑌤𑍍𑌰𑌿𑌮𑌂 𑌕𑍃𑌤𑌾𑌨𑌿
𑌭𑍂𑌷𑌣𑌾𑌨𑌿 𑌤𑌥𑍈𑌵 𑌚 ।
𑌅𑌯𑍋𑌗𑍍𑌯𑌾𑌨𑍀𑌤𑌿 𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿
𑌨𑍈𑌵 𑌦𑍇𑌵𑍇 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑍇𑌤𑍍 ।

என வருதலால் உணரப்படும்.

கஉ. அநேகர் உற்சவகாலங்களில் பெரும்பொருள் செலவுசெய்து நூல்களிற் கண்டிக்கப்பட்ட விபரீத அலங்காரங்களை மூர்த்திகட்குச் செய்வித்தும் செய்தும் வருகின்றார்கள், அவர்களுக்குப் பக்கப்பலமாகப் பிரசாரஞ்செய்வோரும் உளர். ஆகம வரம்பு கடந்துசெய்வதும் பேசுவதுமாகிய செயல்கள் சிவப்பிரீதியாக

மாட்டாவாம். மூர்த்திகளை விதிதவருது அலங்கரித்து வழிபடுவதே சிவபுண்ணியச்செயலாகும்.

கரு. மரம் தருப்பைக்கட்டை லோகம் வஸ்திரங்கள் முதலியவற்றால் உண்டுபண்ணப்பட்ட பாதங்களையும் கரங்களையும் தேவத்திருமேனியிற் சாத்தி அலங்கரித்தல் குற்றமாம். அதனால் அரசனுக்கும் பிரபுக்களுக்கும் பிரசைகளுக்கும் குட்டம் முதலிய நோய்கள் சம்பவிக்கும். அத்தோஷ சாந்திப்பொருட்டுச் சம்புரோக்ஷணம் செய்யவேண்டும்,

தாருவஸ்த்ரைஶ்ச லோஹைஶ்ச
பாதஹஸ்தாதிகல்பிதே ।
க்ருத்ரிமம் க்ருதானி
தேவதேஹே ந யோஜயேத் ।
ந்ருபஸ்ய க்ருச்ச்ராணி ச
குஷ்டாத்யம் ச வ்யாதிவ்ருத்தி ।
தத்தோஷஶமனார்த்தாய
ஶாந்திம் ஸம்ப்ரோக்ஷணம் சரேத் ।

எனப் பீமசங்கிதையிற் கூறப்பட்டது.

கக. அயோக்கியமான முறைகளினுல் பல ஏதுக்களைக்கொண்டு கயிற்றினுற் பிம்பத்தைக் கட்டிஅலங்கரித்தல் குற்றமாம். தரிசித்தோர் அற்பாயுளைப் பொருந்துவர், அரசனுக்குப் பிற அரசர்களாற்பயமும் குட்டம் முதலிய ரோகங்களும் உண்டாம். ஐம்பது கலச ஸ்நபனுபிஷேகம் செய்வதாலும் அகோரமந்திரம் ஆயிரத்தெட்டுச் செபித்தலாலும் அத்தோஷம் சாந்தியாம்:

𑌕𑍃𑌤𑍍𑌰𑌿𑌮𑌂 𑌕𑍃𑌤𑌾𑌦𑍀𑌨𑍍𑌯
𑌯𑍋𑌮𑍍𑌯𑌾𑌨𑌿 𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌨𑌿 𑌚 ।
𑌨𑌾𑌨𑌾𑌵𑌿𑌧𑌾𑌨𑌿 𑌹𑍇𑌤𑍂𑌨𑌿
𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌦𑍇𑌹𑌂 𑌤𑍁 𑌬𑌿𑌮𑍍𑌬𑌸𑍍𑌯 ।
𑌶𑍋𑌭𑌾𑌰𑍍𑌥𑌂 𑌨𑌾𑌨𑌾𑌭𑌰𑌣𑍈𑌃
[illegible] 𑌕𑌷𑍍𑌟𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ।
𑌪𑌰𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌭𑌯𑌂 𑌰𑌾𑌜𑍍𑌞𑌾𑌂
[illegible] 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 ।
𑌤𑌤𑍍𑌰 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌕𑍁𑌰𑍍𑌵𑍀𑌤
𑌪𑌞𑍍𑌚𑌾𑌶𑌤𑍍 𑌸𑍍𑌨𑌪𑌨𑌂 𑌕𑌾𑌰𑌯
𑌅𑌘𑍋𑌰𑍇𑌣 𑌸𑌹𑌸𑍍𑌰𑌕𑌂
𑌜𑌪𑍇𑌦𑍍𑌦𑍋𑌷𑌸𑍍𑌯 𑌶𑌾𑌨𑍍𑌤𑌯𑍇 ।

என அம்சுமான் ஆகமத்திற் சொல்லப்பட்டது:

இவற்ருல் போலிக்கரங்களையும் கால்களையும் பேரங்களில் சாத்துவதும் கட்டுவதும் தோஷமாமென்பது நிச்சயிக்கப்படும்.

கரு. மூர்த்திகளை வேறுபடுத்தாமல் விதிக்கிரமமாக அலங்கரித்தல்வேண்டும், ஒரு மூர்த்தியைப் பிறிதொருமூர்த்தியாக அலங்கரித்தல் குற்றமாம், அதனுல் அரசனுக்குச் சலனமும். சத்துருபயமும் உண்டாம், அத் தோஷ நீக்கத்தின்பொருட்டு இருபத்தைந்து (பஞ்சவிம்சதி) கலச ஸ்நபன பூசைசெய்து சுவாமிக்கு அபிஷேகம் செய்தல்வேண்டும்,

இதற்குப் பிரமாணம் தேவிகாலோத்தரத்தில்.

ஸ்வே ஸ்வே ஹஸ்தேந்த்ர ஸீயாவ
காரயேத்விவர்ஜிதம்।
அந்யஸ்யாந்யம் க்ருதம்
ராஜ்ஞோ கே ப ... பயம் பவேத்।
தோஷநிர்ஹரணார்த்தாய
ஸ்நபநம் பஞ்சவிம்சதி:।

எனக் கண்டுகொள்க.

கசு. ஒரு மூர்த்தியைப் பிறிதொரு மூர்த்தியாக அலங்கரித்தல் செய்தவரும், செய்வித்தவருங் கேடடைவர். சிவதேகத்தில் விட்டுணுவினுடைய உருவம் அலங்கரிக்கப்படின் அத்தேசத்துச் சுபகருமங்களுக்குக் கேடு உண்டாம்; மகாமாரியுமுண்டாம். அதற்குப் பரிகாரமாக பஞ்சவிம்சதிகலசஸ்னபனுபிஷேகஞ் செய்தல் வேண்டும், இதற்குப் பிரமாணம் வீராக்மத்தில்

ஸ்வஸ்வரூபா ஸ்வாயத்தம்
ஸ்வஸ்வரூபா வியக்தக: ।
ஸர்வதேவஸ்வரூபாச
கல்பயித்வா விநஶ்யதி ।
விஷ்ணுரூபம் வா தேவஞ்ச
ஶிவதேவஸ்வரூபகம் ததா ।
ராஷ்ட்ரம் நஶ்யேத் க்ஷேமாணம்
மஹாமாரீ பவேத்ததா ।
தத்தத்கார்ய விஶேஷேண
தத்தோஷநிவாரணே ॥
தோஷாணாம் ஶமனார்த்தாய
ஸ்நாநார்ஹம் ஸ்நபனம் காரயேத் ।

என வருவது கண்டுகொள்க.

கஎ. ஸ்திரமான பேரங்களில் விகற்பமான அலங்காரஞ் செய்யப்படின், பிரபுக்களும் அரசர்களும் தருமகர்த்தாக்களும் அங்கஹீனர்கள் ஆவார்கள். அக்காலத்தில் மூர்த்திக்குச் சோடச (பதினாறு) கலசஸ்நபனாபிஷேகம்பண்ணி மூலமந்திரம் நூறுருச்செபிக்கின் அத்தோஷம் நிவிர்த்தியாகும். பரிவாராலயங்களில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள மூர்த்திகளையும் எழுந்தருளச்செய்யும் மற்றைய பேரங்களையும் ரூபங்களைமாற்றி விபரீதமாக அலங்கரிப்பின் விபரீத பலனுண்டாம்,

ஸ்திராணாஞ்சைவ பேராணாம்
ரூபநாஶ விகல்பதே ।

ப்ரபூணாஞ்சைவ ராஜ்ஞாம் கர்த்ரூணாம்
த்ரவ்யகர்த்ரூணாம் அங்கஹீநகா: ।

ததா சைவ விஶேஷேண
ஷோடஶ: ஸ்நபநம் க்ருத்வா ।

மூலமந்த்ரம் ஶதம் ஜபேத்
தத்தோஷஶமநம் பவேத் ।

எனவரும் பீமசங்கிதையும்,

பரிவாராணி ஸர்வாணி
ஸ்வரூபாணி ஸமர்ச்சயேத்।
ந்ருத்தாணி விஹிதாநி
ஸம்பவாநி விஹிதக:।

எனவரும் வீராகமமும்
இவற்றுக்குப் பிரமாணமாம்.

கஅ. நிருத்த மூர்த்தியில் கல்யாணசுந்தரரையும் கல்யாணசுந்தர ரூபத்தில் நிருத்த மூர்த்தியையும் விகற்பமாக அலங்கரிப்பினும், சத்திசகிதமான வடிவங்களைச் சத்தியின்றி வனப்புச் செய்யினும் தோஷமுண்டாம். அக்குற்ற நீக்கத்தின்பொருட்டு முதலில் சாந்தி பண்ணி மற்றைய கருமங்களைப் பின்னர்ச் செய்ய வேண்டும். இதற்குப் பிரமாணம் காமிகாகமம்,

ந்ருத்தமூர்த்தௌ து கல்யாணம்
கல்யாணே ந்ருத்தமூர்த்திகம்।
விகல்பிதஞ்ச யந்மூர்த்திம்
தந்மூர்த்திம் ஶக்திஹீநகம்।
ததோஷஶாந்திம் ப்ராக்க்ருத்வா
ஸமர்ச்சநாநி காரயேத்।

எனவரும்.

சக. சத்திருபங்களைச் சிவாகிருதியாகவும், சிவருபங்களைச் சக்தியாகிருதியாகவும் கற்பனை செய்யும் விபரீதத்தால் அரசனுக்கு அபஜய முண்டாம்; அக்குற்றநீக்கத்தின்பொருட்டு மூல மந்திரம் ஆயிரமும் சங்கிதாமந்திராகுதியும் பதினறு கலசஸ்நபனபிஷேகமும் செயற்பாலன.

ஶிவம் ஶக்த்யா க்ருதிம் க்ருத்வா
ஶக்திம் ஶிவாக்ருதிம் ததா।
கல்பிதே விபரீதே து
ந்ருபஸ்யாபஜயம் பவேத்।
தோஷாணாம் ஶாந்தயே தத்ர
மூலமந்த்ரம் ஸஹஸ்ரகம்।
ஸம்ஹிதாஹுதிம் க்ருத்வா
ஷோடஶஸ்நபனம் சரேத்।

எனக் காமிகாகமம் செப்புவது
இதற்குப் பிரமாணமாம்.

இவற்றல் எந்த ஒருமூர்த்தியிலேனும், அதற்கு வேறன லீலாருபத்தை விபரீதமாகச் செய்யின் தோஷமாகுமென்று வலியுறுத்தப் பட்டது.

உ0. நிற்பனவாக அமைந்த திருவடிவங்களை நிற்பனவாகவும், இருக்கும் மூர்த்திகளை இருக்கும் ரூபமாகவும், நிருத்த மூர்த்தியை நிருத்த ரூபமாகவும், சயனமூர்த்தியைச் சயனாகிருதியாகவுமே அலங்கரித்தல் வேண்டும், மூர்த்திகளின் சொரூபம் எங்ஙனமோ, அங்ஙனமே அலங்கரிக்கத்தக்கது திருவடிவங்களை உள்ளவாறே அலங்கரிப்பின் அரசனுக்குச் செயமும் சனங்களுக்குச் சௌக்கியமும் உண்டாகும். சயனம் திருமாலுக்கே உசிதமென்றறிக.

ஸ்திதே ஸ்திதானி பிம்பானி
ந்ருத்தே ந்ருத்தானி பிம்பகே।
ஆஸீனே ஸ்வாஸனம் பிம்பம்
சயனே சயனாக்ருதி।
தத்தந்மூர்த்தி ஸ்வரூபேண
தத்தத்ரூபம் ப்ரகல்பயேத்।
ந்ருபஸ்ய ஜயதோ நித்யம்
ஜனானாம் ஸௌக்யஹேதுகம்।

எனக் காமிகாகமத்திற் சொல்லப்பட்டது.

இதனுல் நிற்கும் மூர்த்திகளை இருக்கும் ஆகிருதியாகவேனும், வேறுவிதமாகவேனும் (பொய்க்கால்கைகள் வைத்துக்கட்டி) மாற்றி அலங்கரிப்பதும் இதுபோன்றனவும் ஆகமவிரோதம் என்பது நிச்சயிக்கப்பட்டது,

உக. உக்கிரமூர்த்தியில் சாந்தரூபத்தையும், சாந்தமூர்த்தியில் உக்கிரரூபத்தையும் விபரீதமாகக் கற்பனைபண்ணப்பட்டிருப்பின் அவற்றை அடியவர்கள் தரிசித்தல் ஆகாது. தரிசிப்பாராயின் பூர்வபுண்ணியப் பயன்கள் அழிவெய்தும் என்று ரௌரவாகமம் கூறும்.

𑌶𑌾𑌨𑍍𑌤𑍇 𑌸𑍌𑌮𑍍𑌯𑌾𑌕𑍃𑌤𑌿𑌂 𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌂

𑌸𑍌𑌮𑍍𑌯𑍇 𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌕𑍃𑌤𑌿𑌂 𑌤𑌥𑌾 ।

𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑍇 𑌚 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑍇 𑌤𑍁

𑌦𑍃𑌷𑍍𑌟𑌂 𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍 ।

𑌯𑌦𑌿 𑌦𑍃𑌷𑍍𑌟𑌂 𑌕𑍃𑌤𑌂

𑌹𑌨𑍍𑌤𑌿 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 𑌤𑌦𑌾 ।

இதனுல் யோகவடிவங்களைப் போககோர ஆகிருதியாகவும், போகவடிவங்களை யோககோர ஆகிருதியாகவும் அலங்காரம்பண்ணுதல் குற்றமாமென்பது காட்டப்பட்டது.

உஉ. உரிய வஸ்திரங்கள், யோக்கியமான புஷ்பமாலைகள், உத்தமமாகிய ஆபரணங்கள் ஆகிய இவைகளால் மூர்த்திகளை அலங்கரித்து வழிபடுவோர் இம்மையில் இஷ்டபோகங்களை அனுபவவித்து மறுமையிற் சிவலோகமடைவார்கள். இதற்குப் பிரமாணம்:-

சுப்பிரபேதாகமம்

பலவகை மலர்களால் அலங்காரஞ்செய்வோர் பலவகைப் போகங்களையும் எய்துவர். வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் மகாதேவருக்குச் சமர்ப்பிப்பவர் பேரரச பதவியை அடைவர்.

திருநாவுக்கரசுநாயனார்

குறுந்தொகை

விண்ட மாமலர் கொண்டு விரைந்துநீர்
அண்ட நாயகன்றன் னடிசூழ் மின்கள்
பண்டு நீர்செய்த பாவம் பறைந்திடும்
வண்டு சேர்பொழில் வான்மி யூரீசனே.

பண்—காந்தாரம்

அண்டமா யாதியா யருமறையோ டைம்பூதப், பிண்டமா யுலகுக்கோர் மெய்ப்பொருளாம் பிஞ்ஞகனைத், தொண்டர்தா மலர்தூவிச் சொன்மாலை புனைகின்ற, இண்டைசேர் சடையானை யென்மனத்தே வைத்தேனே.

உங. இதுகாறுங் கூறியவாற்ருல் மகேசுவர வடிவங்கள் பலபேதங்களாயுள்ளன என்பதும், விநாயக சுப்பிரமணிய வடிவங்கள் சிவனது அருள்வடிவங்களாம் என்பதும், சிவனின் வேருகாத திருவருளே சத்தி என்பதும், மூர்த்திகளை விதிப்படி அலங்கரித்தல் வேண்டுமென்பதும், அசுத்த வஸ்திரம் சாத்துவதும், போலிமாலைகள் சூட்டுவதும், போலி ஆபரணங்கள் புனைவதும், போலிக்கரங்கள் பாதங்கள் வைத்துக்கட்டுவதும் குற்றமாமென்பதும், நிற்கும் மூர்த்திகளை இருந்தபாவனையாக அலங்கரிப்பதும் இது போன்ற பிறவும் தோஷமாமென்பதும், அங்ஙனஞ்செய்யிற் பிராயச்சித்தம் செய்யவேண்டும் என்பதும், மூர்த்திகளை உரிய முறையாலே அலங்கரித்து வழிபடுவோர் இம்மை மறுமைப் பயன்களை அடைவார்கள் என்பதும் நூற்பிரமாணங்களுடன் விளக்கப்பட்டன.

உச. ஆலயங்களில் கிரமமற்ற செயல்களை அகற்றிச் சற்கருமங்களைக் கைக்கொண்டு ஒழுகுவது, உத்தமோத்தமமாகும்,

திருச்சிற்றம்பலம்.

உ

# சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக்குருக்கள் அவர்களால் ஆக்கிய

# புத்தகப் பிரகடனம்.

| சம்ஸ்கிருதம் | | ரூ. சதம் |
| --- | --- | --- |
| சிவாகமசேகரம்பிரதிஷ்டாவிதி (1-ம்பாக) | | 5—00 |
| சிவலிங்கப் பிரதிஷ்டாவிதி (2-ம் பாகம்) | | 10—00 |
| பிரணயகலஹ வர்ணனம் | ... | —25 |
| பிராசாதசட்சுலோகி தமிழுரை (சங்கரபண்டிதர்) | | —25 |
| சுப்பிரமணிய பிரதிஷ்டாவ்தி | ... | 3—50 |
| அக்கினிகார்யம் (தமிழுரை) (திருக்கேதீஸ்வரக் குருகுல வெளியீடு) | | 2—00 |
| வைதிக சந்தியாவந்தனம் | ... | 1—50 |
| சைவசிராத்தவிதி | ... | 4—00 |
| வைரவப் பிரதிஷ்டாவிதி | ... | 4—00 |

கிடைக்குமிடம்:

கு. வை. கனகசபாபதிக்குருக்கள் அச்சுவேலி.

இ. ராம. நாகநாதக்குருக்கள், கண்டனூர்,

இராமநாதபுரம் (தென் இந்தியா.)